SRI M. JAGANNATHAN : May I know how long it will take for the Government to examine the recommendations of the Committee?

THE HON. SRI P. KAKKAN : எவ்வளவு நாள் வேண்டுமோ அவ்வளவு நாள் எடுத்துக் கொள்ளப்படும்.

*Pumpsets*

*255 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of applications received by the Government, talukwise, in 1957–58, for the installation of pumpsets for the wells used for agricultural purposes in the Coimbatore district; and

(*b*) the number of pumpsets installed, talukwise?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The attention of the hon. Member is invited to the statement[a] placed on the table of the House.

SRI P. G. MANICKAM : நானூற்றுநான்கு விண்ணப்பங்கள் அனுப்பப் பட்டதில் 88 பேர்களுக்கு மாத்திரம் பம்புசெட்டு வழங்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மற்றவர்களுக்கு ஏன் வழங்கப்படவில்லை என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேட்டவர்களுக்கு எல்லாம் வழங்குவதற்கு முன்பு அவர்களுடைய நிதி நிலைமையைக் கவனிக்க வேண்டும். இரண்டாவது, இருப்பதைப் பகிர்ந்துதான் கொடுக்கவேண்டும்.

*Misappropriation of Funds*

*256 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா —

(அ) மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுக்கா அன்னஞ்சி என்ற ஊஞ்சாம்பட்டி கூட்டுறவு சங்கத்திலும் கூட்டுறவு ஸ்டோரிலும் எவ்வளவு கையாடல் செய்யப்பட்டது ?

(ஆ) இன்னும் எவ்வளவு பாக்கி வசூலாகாமல் இருக்கிறது ?

(இ) இந்த சங்கங்களின் தற்போதய நிலையென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) There was misappropriation to the tune of Rs. 14,945·68 in the Oonjampatti Co-operative Society and Rs. 3,410·82 in the Oonjampatti Co-operative Stores.

(*b*) The entire amounts involved in the misappropriation have yet to be recovered.

(*c*) Both the societies are under liquidation. The total assets of the Oonjampatti Co-operative Society is Rs. 21,528·31 as against its total liabilities amounting to Rs. 20,854.50. The total assets of the Oonjampatti Co-operative Stores is Rs. 8,150·69 as against its liabilities amounting to Rs. 8,771·25. The liquidators are taking steps to realize the assets and pay off the liabilities.

---

[a] Printed as Appendix IV on page 100 infra.

17th September 1958]

**SRI N. R. THIAGARAJAN:** இந்த மோசடிக்காரர்கள் தாங்கள் தப்பிக்கொண்டுவிட்டதாகவும், கூட்டுறவு இலாகாவில் உள்ளவர்களைக் காக்காய் பிடித்து தங்களிடமிருந்து அந்தப் பணத்தை வசூல் செய்ய முடியாதபடி செய்துகொண்டு விட்டதாகவும் கூறிக்கொண்டிருக்கிறார்களே. அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுத்து பாக்கித் தொகையை வசூல் செய்வார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN:** பணமும் வசூலிக்கப்படும், அதற்கு மேற்கொண்டு சட்டப்படி நடவடிக்கையும் எடுக்கப்படும்.

**SRI A. V. P. ASAITHAMBI:** கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஒழுங்குப் பிரச்னை; 'காக்காய் பிடித்தார்கள்', என்ற வார்த்தைகளை இந்த 11-50 a.m.
சபையில் உபயோகிக்கலாமா ?

MR. SPEAKER: There is nothing wrong, though it is not very desirable.

SRI M. JAGANNATHAN: May I know whether the Government have since fixed the responsibility for the misappropriation of these huge amounts?

THE HON. SRI R. VENKATARAMAN: The matter is being investigated.

*Export of Chillies of Ceylon*

*257 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவில் மொத்த விற்பனை பண்டகசாலையாயிருந்து தற்போது சப்ளை அண்ட் மார்க்கெட்டிங் சொஸைட்டியாகவுள்ள ஸ்தாபனத்திற்கு மாதம் எவ்வளவு நஷ்டம் வருகிறது ?

(ஆ) நஷ்டம் வரக் காரணம் என்ன ?

(இ) இந்த ஸ்தாபனம் தேனி சேல்ஸ் சொஸைட்டிக்கு சிலோனுக்கு அனுப்பிய மிளகாய் வத்தலுக்காக ரூ. 2 லட்சம் தர மறுப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) The audit of the accounts of the institution for the period from 1st January to 31st December 1957 is in progress. Profit or loss will be known only after completion of the audit.

(*b*) Does not arise.

(*c*) No, Sir; but the Government understand that there is some delay in the settlement of accounts.

**SRI N. R. THIAGARAJAN:** லட்சக்கணக்கில் லாபம் சம்பாதித்து வந்த இந்த ஸ்தாபனம் இப்போது பல லட்சக்கணக்கில் நஷ்டமடைந்திருக்கிறது என்று பொதுமக்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். எனவே அந்த ஸ்தாபனத்தை மூடுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

**THE HON. SRI R. VENKATARAMAN:** அந்த ஸ்தாபனம் மிகவும் நஷ்டமடைந்துவிட்டதாக பொதுஜனங்கள் அபிப்பிராயப்படுகிறார்கள் என்று கனம் அங்கத்தினர் கூறினார். அத்தகைய அபிப்பிராயம் நிலவ வேண்டாம் என்பதற்காக நான் சில விவரங்களைக் கொடுக்கிறேன். நாம் இலங்கைக்கு வற்றல் ஏற்றுமதி செய்தோம். இலங்கைக்காரர்கள் நம் வற்றல் தரக் குறைவாக இருக்கிறது என்று சொல்லி அதன் விலையில் 12 சத விகிதம் குறைத்து விட்டார்கள். 12 சதவிகிதம் குறைக்க வேண்டாம் என்றும் 10 சதவிகிதம் குறைக்கலாம் என்றும் அங்கேயுள்ள நமது ஹை கமிஷனர் மூலம் அவர்களுக்கு எடுத்துச் சொல்லி அவ்வாறு கணக்குத் தீர்ப்பதற்கு